யாமம்) பரந்துடன் வழங்காது மாவும் புள்ளும் துணையுடன் மகிழ்ந்து வதிதலும், மலையின் இயற்கை வளமும் காமோத்தீபகமாய் இருவர்க்கும் தழிபேரின்பம் விளைத்தலாலும், குறிஞ்சிநிலத்துக்குச் சிறந்த கூதிர்ப்பருவ ஐப்பசி கார்த்திகை மாதங்களும் இடையாமமும் இருளானுங்கித் துனி மிகுதலாற் றலைவனுக்குக் களவிற்சேர்தல் அரிதாதலைபற்றிக் காமக்குறிப்பை பெருக்குதலாலும், களவுக்கூட்டத்தைக் குறிஞ்சிநிலத்துக்கும், அங்ஙனம் குறிஞ்சித்தலைவியொடு கூடிய தலைவன், தனித்தாயினும் சுற்றத்தார் அறிந்து நிகழவிட்டதாத தலைவியை உடன்கொண்டாயினும் பிரிந்துபோமிடம் "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து—நல்லியல்பிழந்த" நிலமேயாதலாற் பிரிதலை பாலைக்கும், அவ்வாறு தலைவியை உடன்கொண்டு சென்றும் இளைஞர் பெரும்பான்மை நாட்டுத் தலைவரேயாதலால், நாம் சொன்னாற்த பெண்டிரை மணந்து இல்வாழ்க்கை நிகழ்த்துங்காற் றலைவன்பரத்தமை காரணமாகப் பெரும்பான்மை நிகழும் ஊடலை மருதத்துக்கும், அவ்வாழ்க்கைக் காலத்து, பகைகளைதல் பற்றிப் பிரிந்து வினைமுற்றிமீள்வோன, பாசறையினின்று ஊர் நோக்கி வருங்காலம் காப்பருவமாகிய ஆவணி புரட்டாதி மாதங்களாதலின், அவை வெப்பமும் தட்பமும் மிகாது நீர்நிழலும் பெறுதலும், ஊர்ப்பக்கத்துக் காடுஞ் சோலையும் காடசெறிந்த, மாவும்புள்ளும் மகிழ்ந்து விளையாடுதலும், மாலையிற் பசுக்கள் மன்றிற்புகுதலும், தீங்குழல் இசைத்தலும் பிறவும் காமக்குறிப்பை மிகுவித்துப் பிரிவாற்றிக்கொண்டு தனித்திருக்கும் தலைவியது கற்புநிலையைப் பெருக்கநாட்டுதலின் இருத்தலை முல்லைக்கும்,† தலைவனைப் பிரிந்த கிழத்திக்குக் கடலுங் கழியுங் கானலுங் காணுந்தோறும் ஆற்றாமை கைம்மிக்கு இரங்கல் நிகழ்வதே இயல்பாதலின் அவ்விரங்கலை நெய்தற்கும் உரியனவாக்கி முற்காலத்தவர் புலனெறிவழக்கஞ் செய்தனாபோலும் இவற்றுக்கு இன்னும் ஏற்புடைய காரணமுளவேனும் அவற்றையுங் கூறிக்கொள்க.

---

விச்சியாதர காந்தர்வர்களும் பிற தெய்வக்கூட்டத்தாரும் மலையினிடம் கூடியுறைவதையே நூல்கள் சிறப்பித்தலும் இக்கருத்தை வற்புறுத்தும்.

† காடுவாழ்க்கை, துணையின்றித் தனிநிலையிற்செய்யும் அறவோர் வாழ்க்கையாதலின், தலைவியின் தனிநிலைக்கும் அதனை இடமாகனோர்போலும்.

நிலங்களின் பெயர்க்காரணம்.

இனி, முற்கூறிய ஐந்துநிலங்களும் முல்லை குறிஞ்சி முதலாகப் பெயர்பெற்றதன் காரணமும் நாம் ஆராய்ந்து கொள்ளற்பாலதாம். இப்பெயர்கள் மரம் அல்லது பூவிசேடங்கட்கு உரியன என்பதும், முல்லைமுதலியவற்றின் மிகுதி அல்லது சிறப்புப்பற்றி அந் நிலங்கட்குப் பெயர்கள் வழங்கலாயின என்பதும் எளிதிற் புலப்படும்*. "கருங்காற்குறிஞ்சிசான்றவெற்பு" (மதுரைக் காஞ்சி-300) "மருதஞ்சான்ற மருதத்தண்பணை" (சிறுபாண்-186). "முல்லை சான்ற முல்லையம் புறவு" (ஷை 169)† "பாலைசான்றசுரம்" (ஷை-304) எனப் பூ அல்லது அதன் முதற்பொருளின் சிறப்புப்பற்றி அந்நிலங்கள் கூறப்படுதல் நோக்குக‡. இனிக் களவியலுரைகாரரும் நச்சினார்க்கினியரும், இந்நிலப்பெயர்கள் அவற்றின் ஒழுக்கமாக மேலே கூறிய உரிப்பொருள்களடியாக வழங்கலாயின என்பர். அஃதாவது— முல்லைக்குரியதாகப் புலனெறிவழக்கஞ்செய்யப்பட்ட ஒழுக்கம் "இருத்தல்" என்பது; இவ் விருத்தற்கே முல்லையென்பது ஒருபெயர் என்பதாம்; "குறிஞ்சியாகிய ஒழுக்கம் நிகழ்ந்த நிலமும் குறிஞ்சி எனப்பட்டது; என்னை? விளக்காகிய சுடரிருந்த இடமே விளக்கெனப்பட்டது போல" என்றார் களவியலுரைகாரரும் (16) மற்றை நிலங்கட்கும் இவ்வாறே கூறிக்கொள்க. இவற்றால் முல்லை குறிஞ்சியென்று கூறப்பட்ட ஒழுக்கங்களிற் காடு மலை முதலியவை அப் பெயர்பெற்றன என்பது அவ்வுரைகாரருடைய கருத்தாகத்தோற்றினும்—அவ் வொழுக்கந்தான் அவ்வாறு பெயர்பெற்றதன் காரணம் என்னை? என்ற கேள்வி திரும்ப வெழக்கூடியதாகின்றது. அதனால் நிலங்கள் முற்குறித்தபடி பூக்களினடியாகப் பெயர்பெறுவதுபோயினும், அந்நிலத்தொழுக்கங்களேனும் அவையடியாக வழங்கலாயின என்று கூறுதலே வேண்டுமென்க. ஆயின்,

* இளம்பூரணவடிகளும், குறிஞ்சிமுதலிய பூக்களின் சிறப்புப்பற்றியே மலை முதலிய நிலங்கள் குறியிடப்பட்டன என்று உதாரணங்களுடன் விரித்தெழுதுதல், "மாயோன்மேய" என்ற சூத்திரத்துக்கு அவரெழுதிய உரை நோக்கியறியலாம்.

† "முல்லைசூழ்முல்லைவேலி" என்றார் திருத்தக்கதேவரும். (சிந். முத்தி. 464.)

‡ ஈண்டு நச்சினார்க்கினியர் "மருதஞ்சான்றமருதம்" முதலியவற்றுக்கு "மருதவொழுக்கமிருந்தமருதம்" என் றிவ்வாறு பொருள்கொண்டாராயினும், "கருங்காற்குறிஞ்சிசான்ற வெற்பு" என்புழி, 'கருங்கால்' என்ற அடையைக் குறிஞ்சியொழுக்கத்திற்கு ஆக்கிக்கொள்ள இடர்ப்படுதலால், அவர்க்கே அது கருத்தன்றென்க.

கூறுவர். இவற்றோடு, கனையபறகட் பரத்தையிற்பிரிவொன்று கூட்டிக் கொள்ளுதலும், * ஆசிரியர் அகத்திணையியலிற் கூறாதுபோயினும் இப் பாலைப்பாற்படும் என்பர், நச்சினார்க்கினியர் (௩௩) இப்பிரிவு நால் வர்க்கு முரித்தாம் என்க.

பொருட்பிரிவு வணிகர்க்கேயன்றி மற்றைவருணத்தார்க்கும் உரித் தென்பதை "மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே" என்பதனால் ஆசிரியர் ஓதினார் இதற்கு, நச்சினார்க்கினியர்—வணிகர்க்கே பொருட் பிரிவுண்டென்று† 'மேவியசிறப்பின்' என்ற சூத்திரத்தில் ஆசிரியர் கூறிப்போந்தமையால், இச்சூத்திரத்துவரும் 'நால்வர்' என்றது, 'அவ் வணிகரொழிந்த நால்வரென்றெழுதி அவரை—அந்தணர் அரசர் உழு துண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என்று குறித்தனர் இவருள் உழுவித்துண்ணும் வேளாளரைப்பற்றி அவர்கூறுவன வரு மாறு:—"இவர் மண்டிலமாக்களுந் தண்டத்தலைவருமாய்ச் * சோணாட்டுப் பிடவூரும் அழுந்தூரும் நாங்கூரும் நாவூரும் ஆலஞ்சேரியும் பெருஞ் சிக்கலும் வல்லமுங் கிழாரும் முதலிய பதியிற்றோன்றி வேளெனவும் அர செனவும் உரிமையெய்தினோரும் குறுமுடிக் குடிப்பிறந்தோர் முதலியோரு மாய் முடியுடைவேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளாளராம். உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி அழுந்தூர்வேளிடை மகட்கோடலும் அவன் மகனாகிய கரிகாற்பெருவளத்தான் நாங்கூர்வேளிடை மகட்கோடலும் கூறுவர்" (௩௦) என்பது. இவ்வேளாளர் இங்ஙனம் அரசரைச் சார்ந்து உயர்ந்திருந்தமைபற்றி, அரசர்க்குரிய திறமெல்லாவற்றினும் இவர் பிரிதற் குரியராயினரென்பது "மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப" என்ற அடுத்த சூத்திரவுரையாற் றெரியவருகின்றது. இங்ஙனம், உயர்வேளாளர் என நான்காம்வருணத்தவரில் ஒருசாராரைப் பிரித்து அவர்க்கு அரசர்க் குரிய வரிசைகளை உரைகாரர் கூறுதலால், முற்காலத்தே அவர்க்கு நாட்டி

* உடன்போக்கும் பாலையாகியபிரிவேயாமென்பர் நச யர் (பக்-௩௧.)

† இளம்பூரணர் "மேவிய சிறப்பி னேனோர் படிமைய . பிரிவே" என்ற சூத்திரத்துக்கு "தேவர்ப்பூசை முதலாயினவும் மக்களும் முறைமை தப்பியவழித் தப்பாது அறமறிவுசெலுத்தல் காரணமாகவே பொருளாக்குதல் காரணமாகவும் பிரி வுளராப" என்று மொழிப்பெயர் கூறினர் "படிமை என்பது பிரதிமா என்னும் வட மொழிச்சிதைவு, அது தேவர்க்குப் பெயர்ப்பாக நிலைத்திருக்கச் செய்வதெனப்பட்ட தே வர்ப்பெயரானது' என்பது அவர் விசேடவுரை இதனாலறியின், தொல்காப்பிய னார் காலத்தே கோயில்களில் விக்கிரகங்கள் வணங்கப்பட்டுவந்தமையும் அக் கோயில்களை அரசர் காத்துவந்தமையும் பெறப்படும்,

எனவும் கூறுவர். இவற்றால், பிரிவுவகைகளை உரிமைப்படுத்துவதில், பின்புலவரோர் தொல்காப்பியனார் கருத்தோடு சிறிது வேறுபாடுகொண்டிருந்தமை புலப்படும்.

இனி, ஓதல் தூது பொருட்பிரிவுகளிடத்தும், பலவாறு சூழ்ந்து போர்குறித்துநிற்கும் பாசறையிடத்தும், தலைவி தலைவனுடன்செல்லுதல் பண்டை வழக்கமின்மையால், அங்ஙனம் புலனெறிவழக்குச் செய்தலில்லை.* இதனை "முந்நீர் வழக்கம் மகடூஉவொ டில்லை" (௩௪) "எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார்" (௧௭௫) என்ற சூத்திரங்களா லுணர்க. இவற்றுள் "முந்நீர்வழக்கம்" என்பதற்கு, 'பொருட்பிரிவுக்காகக் கடலின்மேல் மரக்கலத்திற் செல்லுதல் மகடூஉவொடு இல்லை' என்று பொருள்கூறி, ஏனைய, காலிற் (தரையிற்) பிரியுமிடத்துத் தலைவியுடன் சேறலுண்டென்று தாற்பரியங் கூறுவர் ஒருசாரார் † இங்ஙனங் கூறுமிடத்து, பொருட்பிரிவொழிய ஏனைப்பிரிவுகளில் மனைவியருடன் செல்லலாம் என்பது பெறப்படுமென்றும், அவ்வாறு மனைவியருடன் சென்றதாக மரபில்லையென்றும், ஆகவே "முந்நீர்வழக்கம்" என்பதற்கு—பெண்ணொடு செல்லத்தகாத ஓதல், தூது, பொருள் என்னும் மூன்று நீண்மையான செலவு என்று பொருள்கொள்ளுதலே ஆசிரியர்கருத்தாமென்றும் நச்சினார்க்கினியர் பொருள் கூறினர். பொருள்வயிற்பிரிவு—கலத்திற் பிரிதல், காலிற்பிரிதல் என இருபகுதிப்படும்; 'கலத்தினுங் காலினுந் தருவன ரீட்ட' என்று இளங்கோவடிகளும் (சிலப் 2 7) கலத்திற்பிரிவு—வணிகர்க்கு, காலிற்பிரிவு—மற்றை மூவர்க்கும் உரித்தென்பது "இருவகைப்பிரிவும்" (௩௭) என்ற சூத்திரவுரைநோக்கி உணர்க. இனித் தலைமக்களையன்றி, அவர்க்கு அடிமையானவர் ஏவல்செய்வோர் இவர்களைப் பாடுமிடத்து, பெண்ணொடு சென்றாராகக் கூறுதலுமுண்டென்பர் (௧௭௯)

இனி "வேண்டிய கலவி யாண்டுமூன் றிறவாது". (௧௮௮) என்று ஆசிரியர் கூறுதலால், கலவியின்பொருட்டுப் பிரியும் பிரிவு, மூன்றாண்டுக்கு மேற்படக்கூடாதென்பது, பழையவிதியாகத் தெரிகின்றது. நச்சினார்க்கினியர், இச்சூத்திரத்துக்குத் தத்துவப்பொருளொன்றை இட்டுப் படுத்துக் கூறினாரெனினும், வழிநூல்செய்த நம்பியார்கொள்கைப்படி (௮௯).

* நாட்டுக்கோட்டைவணிகருள், பொருட்பிரிவின் மகளிரை உடனழைத்துச் செல்வது, பெரிதும் தடுக்கப்பட்டிருத்தலுங் காண்க.

† தொல்-அகத்-37-இளம்.

வியாக்யானம் எழுதிய பேராசிரியரான ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை, இம்மடலேற்றத்தின் தாற்பரியத்தைச் சங்க்ரஹித்து அடியில் வருமாறு எழுதுவர்:—"மடலேறுகைதான, உள்ளதொன்றைக் குளியாதே உகந்த விஷயத்தை ஒரு படத்திலே விலிகித்து (எழுதி) 'அதனைக்கொண்டு திரிகையும், அறவிளைந்தால் அதன் காற்கிடையிலே விழுகையும், விழுந்தால் அங்ஙனே செல்லரிக்கக் கிடக்கையும், அங்ஙனே முடிக்கையுமாம்; இத்தால் பிரயோசனம் என்னென்னின்—அவன் (திருமால்) கேட்குமென்கை, இலக்கியாகில இது தானே பிரயோஜனமாகை"—என்பது. இதனால், ஆரிடமக்களூர் விரும்பினபெற இயலாவிடத்துச் செய்துகொள்ளும் பிராயோபவேசம்* போல, இம்மடலேற்றமும் தமிழ்நாட்டார் முன்னாளில் வழங்கி வந்த தற்கொலை முறை என்பதாம்.† அதற்குத் 'மடல்மா' கருவியமைப்பும் தெரிகின்றன. ஆதலால், இம்முறை, தாம் விரும்பிய பெண்ணை அடையப்பெறாதவிடத்து மட்டுமே தமிழ் நூல்களில் வழங்குவதன்றி வேறிடங்களில் நிகழ்வதாகக் கூறப்படுவது இல்லை. இங்ஙனம் மடலூர்வதானது ஆடவர் மட்டுமே செயற்குரியதன்றிப் பெண்கள் எந்நிலையினும் செய்யத்தக்கதன்றென்பதும், அதனால் அங்ஙனம் புனைநெறிவழக்குஞ் செய்யக்கூடாதென்றும் தொல்காப்பியர் விதிப்பர் (சூ. 35). "கடலன்ன காமம் உழந்து மடலேறாப் பெண்ணின் பெருந்தக்கதில்" என்ற வள்ளுவனாரும் இவ்விதியைக் குறிப்பித்தல் காணலாம். ஆயின், திருமங்கை மன்னன் தாமருளிய மடல்களில், பெண்ணொருத்தி திருமாலைக் 'காமுற்று மடலூர்வதாகப் பாடினாராதலால், அதற்குப் போகமென்னை யென்னின்;—அப் பெண், மடல் எறியதாகக் கூறாது எழுவேனென்ற தன்மையாதலின், இது பெருந்திணைக்குரிய மடலேற்றமன்றிக் கைக்கிளையின்பாற்படும்

---

* இதனை 'வடக்கிருத்தல்' எனத் தமிழ்நூல்கள் கூறும் (புறநானூறு பார்க்க)

† நீலகிரிமலைவாணரில் படகர் (Badagar) என்ற சாதியாரில், இளைஞனொருவன், தான் காதலிக்கும் பெண்ணை அடையக்கூடாமல் நேருமாயின், 'அவளை எனக்குத் தாராவிடின் தற்கொலைபுரிந்து சாவேன்' என்று சபதஞ்செய்து அதனைப் பலரறியவும் அறிவித்து முயல்வதும், அம்முயற்சியில் அவன் பெரும்பாலும் வெற்றியே பெறுவதும் இன்றும் வழக்கமென்பர் (E Thurston's Ethnographic Notes in S India Page 21) மடலேற்றமும் தற்கொலையே என்பது, இச்சான்றோடு 'உரைபாய்'தலையும் சேர்த்து உரைகள் கூறுதலாலும் அறியலாகும்

மென்று கூறுவர். (சூத்-௩௫)* பன்னிருபாட்டியலுடையார், மகளிர் மடலேறாரென்றும், ஆனால் கடவுளரைத் தலைவராகவைத்துப் பாடுமிடத்து அவர் மடலேறுவதாகக் கூறப்படுமென்றும் இம்மட்டு இலக்கணங் கூறுவர். இதனை "மடன்மாப் பெண்டிர் ஏறார் ஏறுவர் கடவுளர் தலைவராய்வருங் காலை" "கடவுளர் மேற்றே கன்னிகை மடலே" (உசு ௩-௬) என்பவற்றால் அறிக. இதனால், பெண்ணொருத்தி ஏறுவதாக ஆழ்வார் பாடியது பிற்பட்ட இலக்கணமுறைக்குப் பொருந்துவதெனலாம். மகளிர்க்கு மடலேறும்வழக்கில்லை என்பதை, ஆழ்வாரே பெரியதிருமடலில,

" ... காமத்தின்
மன்னும் வழிமுறையே நிற்றும்நாம் மானோக்கின்
அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல்
மன்னு மடலூரார் என்பதோர் வாசகமும்
தென்னுரையிற் கேட்டறிவ துண்டதனை யாம்தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்"

எனப் பெண்ணின் கூற்றிலமைத்து அருளிச்செய்தலுட் கொண்டு நோக்கற்பாலது.

**பெருந்திணையின் மற்றைப் பகுதிகள்**

இனி, ஆரிய மணங்களுள், பிரமம் பிராசாபத்தியம் ஆரிடம் தெய்வம் என்ற நான்கும் இப்பெருந்திணைப் பாற்படுமென்பது "பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே" (௧௦௫) என்னும் ஆசிரியர்கூற்றால் அறியத்தக்கது. இவற்றை இங்ஙனம் கூறியதற்கு, நச்சினார்க்கினியர், "இந்நான்கும் ஒருதலைக் காமம்பற்றி நிகழாமையானும், ஒருவனோடு ஒருத்தியை எதிர் நிறுவி, அவருடம்பாட்டொடு புணர்க்குங் கந்தருவம் அன்மையானும், அவற்றின் வேறாகிய பெருந்திணையாம்" என்று காரணங் கூறுவர்.† இப்பெருந

* "கனவினால் ஞாயிறே காட்டாய்நீ யாயிற்-பனையீன்ற மாவூர்ந் தவன் வரக் காமன்-கணையிரப்பேன் காலபுலவிக் கொண்டு" (147-58-60) எனக் கலித்தொகையில் வரும் பெண்பால் மடற்கும் இதுவே கொள்க.

† "பெருந்திணை, நடுவணைந்திணையாகிய ஒத்தகாமத்தின் மிக்குங் குறைந்தும் வருதலானும், எண்வகை மணத்தினும் பிரமம் பிராசாபத்தியம் ஆரிடம் தெய்வமென்பன அத்திணைப்பாற்படுதலானும், இந்நான்கும்ஙனமும் மேன்மக்கள் மாட்டு நிகழ்தலானும் இவை உலகினுட் பெருவழக்கெனப் பயின்றுவருத லானும் அது பெருந்திணை எனக் கூறப்பட்டது" என்பர் இளம்பூரணர் (தொல். அகத். 1, உரை.)

திணையும், முதலிற் கூறிய ஒருதலைக் காமமாகிய கைக்கிளையும்—ஐந்திணையாகிய இன்பவொழுக்கம்போலச்—சிறப்புடையனவாகக் கொள்ளப்பட்டிலவேனும் அகப்பொருட்கு உரியனவாகக்கொண்டு ஆசிரியரால் தழுவப்பட்டன (பக்.  ) பேராசிரியர் இவற்றை அகத்தைச் சார்ந்தபுறம் என்பர். (திருக்கோ. ௪ உரை) நம்பியாரும் இக்கைக்கிளை பெருந்திணைகளை அகமென்று பகுத்துக் கூறுதல் காண்க (௨௪ ௬). இனி, ஐந்திணைக்கும் நிலமும் பொழுதும் மக்களும் வகுத்தாற்போல, இக்கைக்கிளை பெருந்திணைகட்குக் கூறாது, எல்லா நிலமும் காலமும் இவற்றுக்கு வழங்குமென்றும் (௬௯-௭௦), பிறர்க்கு அடிமைகளாயுள்ளாரையும், ஏவல்செய்வாரையும் தலைமக்களாகாமைத்துப் பிரித்திட்டது, அது சிறப்புடைக்காமத்திற் சேராமையால், இக்கைக்கிளை பெருந்திணைகளைச் சார்ந்தனவாகக் கொள்ளப்படுமென்று ஆசிரியர் கூறுவர் (௨௬). இனி "அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்" என்று அவர் கூறுதலால், அக்காலத்து அடிமைவழக்கம் நாட்டிலிருந்தமை பெறப்படுகின்றது. ஏவலாளரை "வினைவலர்பாங்கு" என வேறு பிரித்தமையின், 'அடியோர்' என்பது விற்றுக்கொள்ளற்குரிய அடிமைகளையே குறிப்பதாதல்வேண்டும்.

**அகப்பொருட்பாட்டுக்குரிய தலைமக்கள்**

இனி, மேலே கூறிப்போந்த எழுதிணையையும்பற்றிப் பாடுவோர் தவிர்த்தற்குரிய மரபுகளுட் சிலவும் ஆசிரியர் கூறுகின்றார். ஐந்திணைபற்றிப் பாடும் செய்யுட்களில், தலைமக்கள் பெயரை வைத்துக் கூறாது, திணைப்பெயர்களாக முன்குறித்த—வெற்பன், துறைவன், கொடிச்சி, கிழத்தி என்ற பொதுப்பெயர்களாற் கூறவேண்டுமேயன்றி, அத்தலைமக்களுடைய இயற்பெயரைச் சுட்டிக் கூறிச் செய்யுள்செய்தல்கூடாதென்றும், இயற்பெயரைச் சுட்டிக்கூறின் அஃது அகமாகாது புறமாம் என்றும், ஆனாற் கைக்கிளை பெருந்திணைகள் சுட்டியொருவர்பெயர் கொண்டும், கொள்ளாதும் வருமென்றும் ஆசிரியரால் விதிக்கப்படுகின்றன. இவ்வாறு அகப்பொருட்கு உரியவனாகிய தலைவன்பெயரைத் திணைப்பெயரால் கூறல்வேண்டுமென்ற விதிப்படியே, அகத்தைச் சார்ந்த நற்றிணை குறுந்தொகை கலித்தொகை முதலாய பண்டைநூல்களும், பிற்காலத்துக் கோவைகளும் அமைந்திருத்தல் காணலாம். ஆயின், முற்காலநூல்களிலும் பிற்காலநூல்களிலும் அரசரியற்பெயர் முதலியன கூறப்படுகின்றனவே எனின்—கூறுவேம்; அகப்பாடல்களில் இரண்டுவகைப்பெயர்கள் வழங்குவன:- அவை,

களுக்கே உரியதென்று ஆசிரியர் நியமிக்கின்றனர். இதனை "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்—பாடல் சான்ற புலனெறி வழக்கம்—கலியே பரிபாட் டாயிரு மருங்கினும்—உரிய தாகு மென்மனார் புலவர்" என்ற சூத்திரத்தால் உணர்க. பரிபாடல்* இப்பகுதிபற்றி நிகழ்தல், செய்யுளியலில், "காமங் கண்ணிய நிலைமைத் தாகும்" எனப்படுதலானும் உணரப்படும் (கடுகூ) இதனால் ஆசிரியர் காலத்து எல்லாப்பாக்களினும் அகப்பொருள் அதிகமாக வழங்கு மை தெரியலாம். ஆனால், தொல்காப்பியர்க்குப் பிறபட்டு இவ்வரையறையில்லாமற்போயிற்றென்பது, கடைச் சங்கத்து நூல்களிற் கலித்தொகை நீங்க ஒழிந்தனவும் பிறபட்ட நூல்களும், ஆசிரியப் வெண்பா வஞ்சிப்பாக்களில் அமைக்கப்பட்டிருத்தலால் உணரப்படுகின்றது. நச்சினார்க்கினியர், இப்பாக்கள் அகம் புறமிரண்டற்கும் பொதுவாம் என்று பிற்காலத்து நேர்ந்த மாறுபாட்டை உரையிற் கொண்டு அமைப்பர்.

மேற்கூறிய போந்தவாற்றால், பண்டைத்தமிழ்மக்கள் புலனெறி வழக்கஞ் செய்தற்குப் பகுத்துக்கொண்ட கைக்கிளை ஐந்திணை பெருந்திணை என்ற காமப்பகுதிகளின் வரலாறுகள் நன்குவெளியாகும். இவ்வெழுதிணை பற்றியும் கூறற்குரிய வேறுசில விதிகளும் உள்ளனவாயினும், முக்கியமாகத் தெரிந்துகொள்ளத்தகும் பொதுவிதிகள், முற்கூறியனவே. ஏனையவற்றில், ஏற்பன உரிய விடங்களில் உணர்த்தப்படும். இனி, இவ்வெழுதிணைப் பொதுவிதிகட்கெல்லாம் மேற்கோட்செய்யுட்கள் எழுதுவதாயின், இவ்வாராய்ச்சி பெருகிவிடுமென்றஞ்சி உரைநோக்கி உணருமாறு விடப்பட்டன.

அகப்பொருளின் பெருமை

இவ்வெழுதிணைகளையும் பற்றிப் பாடிவந்த வழக்கம் தொல்காப்பியனார்க்கு முற்பட்ட காலத்தே பெருகி வழங்கியதாதல் வேண்டுமென்பது, 'முந்து நூல்கண்டு முறைப்பட வெண்ணிப் புலந்தொகுத்தோன்' என இவ்வாசிரியர் கூறப்படுதலால் அறியலாகும். அங்ஙனமே தொல்காப்பியர்க்குப் பிற்காலத்தும் அவரிட்ட ஆணைவழியே நூல்கள் பாடப்பட்டுப் பெருகியிருந்தமை

* இப்போது, ஒருங்கு பிற கிடைத்த பாடல்கள், டாக்டர் சாமிநாதையரவர்களால் அச்சிடப்பட்டுள்ளன.

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்துங் கலியே அகம்புறமென்று
இத்திறத்த எட்டுத் தொகை"

என்று எண்ணப்பட்ட பழைய தொகைநூல்கள் எட்டில், புறம் பதிற்றுப்பத்து ஒழிந்தனவும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிற் பலவும், பத்துப்பாட்டிற் சிலவும்—இவ்வகத்திணை பற்றி அமைந்தனவேயாம். இவை பெரும்பான்மை குறிஞ்சி முல்லை பாலை மருதம் நெய்தல் என்னும் ஐந்திணையும் — அத்திணைமுறையாக அன்றி வேறு திணைமுறையாக வைத்துக் கூறுவன. நச்சினார்க்கினியரும், "தொகைநூல்களிலும் கீழ்க்கணக்கிலும் இம்முறை மயங்கிவரக் கோத்தவாறு உணர்க" என்றார் (பக்-க0). இவற்றுள் நற்றிணை முதலிய தொகைநூல்கள், ஒருவரானன்றிப் புலவர் பலரால் பாடப்பட்டனவாம். அஃதாவது— ஒவ்வோர்காலத்து ஒவ்வொரு திணைவிகற்பத்தைப் பற்றிப் புலவர் பாடிப் போந்த செய்யுட்கள், பிற்காலத்தொருவரால் திரட்டப்பெற்று முறைப்படி கோக்கப்பட்டன என்பதாம். இங்ஙனம் அகப்பொருளை விஷயமாகக் கொண்டு; தம்மையாண்டுவந்த அரசர் முதலியவரைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு பாடும் வழக்கம், முன்னாளிற் றமிழ்மக்களாற் பெரிதும் மதிக்கப்பட்டுவந்தது. ஒவ்வொரு திணையின் முதல் கரு உரிப்பொருள்களின் இயற்கைச் சிறப்புக்களை எடுத்துவிளக்கி அழகாகப்பாடிவந்த அருமைபற்றிப் பண்டைப் புலவர்கள், பாலைபாடிய பெருங்கடுங்கோ, பாலைக் கௌதமனார், மருதனிளநாகனார், நெய்தற் கார்க்கியன், வெறி பாடிய காமக்கண்ணியார், மடல்பாடிய மாதங்கீரன் என்றிவ்வாறு அத்திணைத் துறைப்பெயர்களாற் சிறப்பித்து வழங்கப்படுவாராயினர். அன்றியும், பண்டைநாளில் அகப்பொருளிலக்கணங்களை அறிந்திருந்தமை, புலமைக்கே பேரழகாகவும் முன்னோரால் கருதப்பட்டிருந்தது. கடைச் சங்கநாளில் ஒருகாலத்தே பொருளிலக்கண மறிந்த புலவர் கிடையாமற் பாண்டியன் புடைபட்டுக் கவன்றபோது "என்னை? எழுத்துஞ் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே? பொருளதிகாரம் பெறேமேல் இவை பெற்றும் பெற்றிலேம்" என அவ்வரசன் கூறினனென்றும், அக்காலத்தே இறையனார் முன்னின்று அவன் கவற்சிநீங்கப் பொருளிலக்கணமொன்றை அருளிச்செய்ய, அதற்குப் புலவரைக்கொண்டு அவன் பொருள்கண்டனனென்றும் கேட்கப்

என்ற வெண்பாவால் உணர்க. இங்ஙனம் தமிழ்மக்களது களவுப்புணர்ச்சியைக் காந்தருவமாகத் தொல்காப்பியனார் கூறினும், தமிழர்க்கு அவ்வொழுக்கம் ஆரியர்களிடத்திருந்து வந்ததெனபது அவர்கருத்தன்று. இதனைக் "காமக்கூட்டங் காணுங்காலை, மறையோர் தேஎத்து மன்றலெட்டனுள்—துறையமை நல்லியாழ்த் துணைமையோ ரியல்பே" என்ற அவர் கூற்றில், 'காமக்கூட்டத்தை ஆராயுமிடத்து அது யாழோர் கந்தருவரது இயல்புடையதாகும்' என்னும் ஒற்றுமையில் வேற்றுமை கூறுதலால் உய்த்தறியலாம். ஆகவே "தமிழ்கூறு நல்லுலகத்து வழக்குஞ் செய்யுளுமே" ஆசிரியர் ஓதினனவெனபதூஉம், ஆரியமணம்பற்றிய செய்திகளை அவர் கூறவந்தவரல்லர் என்பதூஉம் உணர்தக்கன. இவ்வொழுக்கம் தமிழ்வழக்கே என்பதற்குத் திருத்தக்கதேவரும் "இலைபுறங் கண்ட கண்ணியினமி ழியற்கையின்பம்" (காமஞ்சரி—க). "தேவர் பண்ணிய நீடுதொடையின்சுவை—மேவர் தேன்றமிழ் மெய்ப்பொருளாதலின்" (பதுமை-கஅஅ) எனச் சிந்தாமணியிற் கூறுதல் காண்க. யாழோர் கூட்டத்துக்கும் இக் காமக்கூட்டத்துக்குமுள்ள வேறுபாட்டை, நச்சினார்க்கினியர், "கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும், ஈண்டுக் கற்பின்றிக் களவு அமையா" தென்பதனை விளக்கினார்.

இனித் தமிழொழுக்கமாகிய இக்களவுக்கூட்டம் நான்கு வகையாக முன்னோரப் கூறப்படுகின்றது: அவை— காமப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டம்—என்பன. ஆசிரியர் இவ்வகைகளை,

"காமப் புணர்ச்சியு மிடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்
றாங்கநால் வகையினு மடைந்த சார்பொடு
மறையென மொழிதன் மறையோ ராறே"

எனச் செய்யுளியலிற் கூறுவர் (சகூக). இந்நான்கு பெரும்பிரிவுகளே, பலவிகற்பங்களும் பகுதிகளு முடையனவாக விரிந்து, ஒருகதைபோல வந்து முடிகின்றன. இங்ஙனம் முடியுங் களவுவரலாற்றில், பாத்திரங்களாக நின்று கூற்று நிகழ்த்தற்குரியார், அறுவர்: அவர்—பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன் தலைவி என்பார் (ருOஉ). இவர்களல்லது இக் களவொழுக்கத்தில் வேறெவரும் பேசுதற்குரியவராக விதிக்கப்பட்டிலர். இவர்களுள்:—

(1) பார்ப்பான—இவன் தலைவனுக்கு இழிவுநேரும் இடங்களிலெல்லாம் நெருங்கி இடித்து உரைக்கிறதற்கும், தலைவற்கு வரும் தீமைகளை நிமித்தங்களால் அறிந்து விலக்குமுபாயங்களைச் சூழ்தற்கும் உரியன். தலைவியும் தலைவனும் உடன்போம்போது, இவன், அவ்விருவரையும் இடைவழியிற்கண்ட செய்திபற்றிச் செவிலி (தலைமகள் தாயரில் ஒருத்தி) முதலியோரால் உசாவவும், இரக்கவும் உரியன் என்றும் கூறுவர்.

(2) பாங்கன—இவன் தலைவனுக்கு உசாத்துணையாகிய தோழன். இவன் பார்ப்பனக்குலத்தவனே என்பர் களவியலுரைகாரர். (பக், ருரு). நச்சினார்க்கினியர் 'இவன் பெரும்பான்மை பார்ப்பானும்' என்பர் (பக் உச௫) நம்பியார், தலைவற்குப் பார்ப்பானும் சூத்திரனுமாக இருவகைப்பாங்கருளரென்றும், இவ்விருவரும் தலைமகற்குரிய உயிர்த்துணைவராக அவர் தந்தையால் அடைக்கலமாகக்கொடுக்கப் பெற்ற உரிமையுடையார் என்றுங் கூறுவர் (க0கூ)

(3) தோழி—இவள் தலைவியின் செவிலித்தாயினுடைய மகள் (கஉரு). இவள், தலைவிக்கு உசாத்துணையாய் நன்மையுந் தீமையும் ஆராய்ந்து, அவட்குவருந் துன்பந்தவிர்த்தற்கு உரியள். இவளை நல்லறிவுவாய்ந்தவளாகச் சொல்லுவர் (உருகூ).

(4) செவிலி—தலைவியைப்பெற்ற தாய்க்குயிர்த்தோழியாய்த் தலைவியின் ஆக்கநோக்கி நல்லறிவும் ஆசாரமும் பெருக அவளை வளர்த்தவள். இவள் பெற்றவளாகிய நற்றாயினும், தலைவியிடம் பெரிதும் அன்பும் அந்தரங்கமும் உடையளாதலால், இக்களவுவரலாற்றிற்குச் சிறந்தவளாய தாய் என்றே சிறப்பித்துக் கூறப்படுவள் (கஉச).

(5) தலைமகன்—இவ்வகவொழுக்கத்துக்குச் சிறப்புடைய தலைவன். இவன் பதினாறாண்டினனாய்ப் பெருமையுமுரனுமுடையனாய் உருவு திரு குலம் குணம் அன்பு அறிவு முதலியவற்றில் ஒப்புயர்வற்ற ஓர் உத்தமபுருடன்.

(6) தலைமகள்—இவ்வகவொழுக்கத்துக்குச் சிறப்புடைய தலைவி: இவள் பன்னீராட்டைப்பிராயத்தளாய், அச்சநாணமடங்களும் (கூ)

செறிவு நிறை அறிவு அருமைகளும் (௨0௬) கொண்டு, உருவு திருமுதலியவற்றால் (௨௭௩) தலைவனோடு ஒத்து விளங்கும் ஓர் உத்தமமாது.

இங்ஙனம் களவுப்பகுதியிற் கூற்று நிகழ்த்துதற்குரியவர்களைச் சுருக்கமாக உணர்ந்து கொள்க.

இவருள், தலைவன், தலைவி, தோழி, பாங்கன் இந்நால்வரும் ஒருவரையொருவர் அழைத்தற்கு, உயர்திணைப் பொதுப் பெயர் ஒன்று ஆசிரியர் கூறுவர். அஃது "எல்லா" என்பது. இச்சொல்லால், தலைவியுந் தோழியும் பெரும்பான்மை தலைவனையும், அத்தலைவன் சிறுபான்மை தலைவியையும் பாங்கனையும் அழைத்துக்கொள்வர் (௨௨0). பிற்காலத்து, 'இச்சொல், எலா, எல்ல, எலுவ எனவும் திரிந்தது.* இனி, அன்னை என்னை எனவும் முறைப்பெயர்களும் இப்புலனெறிவழக்கில் வழங்கும். அன்னை யென்பது தலைவி தோழியையும், தோழி தலைவியையும் அழைக்கும் சொல்லாகவும், என்னை என்பது அவ்விருவருந் தலைவனை விளிக்குஞ் சொல்லாகவும் கொள்வர் (௨௪௬).

தலைவன் தலைவியர்க்கு முறையே பதினாறும் பன்னிரண்டும் பருவ ஆண்டுகளாகக் கூறப்படுதலை, மெய்ப்பாட்டியலிற் "பிறப்பே குடிமை" (௨௭௩) என்ற சூத்திரவுரையிற் காணலாம். இக்களவொழுக்கமானது இரண்டு மாதங்கட்குள் நிகழ்ந்து முடிதற்குரியதென்பது "களவினுட் டவிர்ச்சி வரைவி னீட்டந் திங்க ளிரண்டி னகமென மொழிப" என்ற களவியற் சூத்திரத்தால் அறியற்பாலது. இதனுரைகாரர், "இதனால், ௧௧-ஆண்டும் ௧0-திங்களும் புக்க தலைமகளோடும்,† ௧௫-ஆண்டும் ௧0 திங்களும் புக்க தலைமகனைப்போலும், புணரவேண்டியது என்பது பெற்றாம்; இவளும் இருதிங்கள் களவொழுக்கத்தே ஒழுகப் பன்னிரண்டாட்டைப் பிராயத்தளாம்; அது மக்கட்பேற்றுக்குக் காலம். களவொழுக்கத்துக்குப் பொருந்தாதென விலக்கப்பட்டதாம், ஆசிரியர்களான்" என்பது. இவனும் இவ்விருதிங்கட் களவொழுக்கம் ஒழுகப் பதினாறாட்டைப் பிராயத்தனும்; அஃது ஆண்மை நிலைபெறுங் காலமாக

* செந்தமிழ்நாட்டில் 'எலா' என்று பெண்டிரை அழைத்தல் இன்றுமுள்ள வழக்காம்.

† பேராசிரியரும் இவ்வாறெழுதுவர் (திருக்கோவை, 9 உரை).

லாற் களவொழுக்கத்துக்கு "விலக்கப்பட்டதாம்" என எழுதுதல் ஈண்டு ஆராயத்தக்கது. "பன்னீராண்டும் பதினாறாண்டும் பெண்மையும் ஆண்மையும் பிறக்கும் பருவமென்பது வேதத்தின் ஒப்ப முடிந்தமையின், அதுவும் ஒப்பெனவே படும்" என்பர் மெய்ப்பாட்டியலுரைகாரர் (உஎ௩). இனி, ஒரு சாரார் இக்களவொழுக்கம் பதினைந்து நாளில் நிகழுமென்றாராயினும், அஃது இக்களவியல் உரைகாரரால் மறுக்கப்படுகின்றது (பக் க௩எ).

இனி, மேற்கூறிய பார்ப்பார் முதலிய அறுவரும் இன்னவின்னவாறு கூற்று நிகழ்த்தற்குரியர் என்று அக்கூற்றுக்களை ஆசிரியர் தனித்தனிச் சூத்திரங்களாற் குறிப்பிடுகின்றார்.* ஆனால், பிற்காலத்து அகப்பொருளிலக்கணம்போல இப்பேச்சுக்களையெல்லாம் முறைப்படுத்தி அவர் கூறவில்லை. இங்ஙனம் தனித்தனி வைத்துக்காட்டப்பெற்ற கூற்றுக்களைக் கோவைக் கிளவிகள்போலத் துறைப்படுத்துக் கூறுவதற்கு, ஆசிரியர்காலத்து வழங்கிய அகப்பொருண்முறைவைப்பு இன்னதென்பதை விளக்கும் இலக்கியங் கிடையாமையாற் சிறிது தடையாகின்றது. கடைச்சங்க நாளில் அகத்திணைபற்றி எழுந்த நற்றிணை முதலியவை, பிற்காலத்துக் கோவைகளிற் கண்ட துறைகளையே பெரும்பான்மை கூறினும், அந்நூல்கள், கோவைபோலக் காட்சிமுதலாகத் தொடங்கிப் பரத்தையிற்பிரிவிறுதியாக வைத்துக்கூறாது, குறிஞ்சி பாலை என்ற திணைமுறைப்படியே வைத்தோதுதலால், ஒரு துறைக்கு மற்றொரு துறை தொடர்பில்லாமலே காணப்படும். இங்ஙனமாகத் தொல்காப்பியனார் அவ்வவர் கூற்றுக்களைக் கோவைப்படக் கூறாமற்சென்றதும், பழைய இலக்கியங்களும் அதற்கேற்பக் காணப்படுவதும் நோக்கும்போது, முன்னாளிற் குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தலென்ற ஐந்திணையில் ஒருமுறைபற்றிப் பாடுதலே பெருவழக்காக இருந்ததென்பது புலப்படுகின்றது. ஆயினும், நுணுகி ஆராயுமிடத்துத் தொல்காப்பியத்தின் அகப்பொருண்முறைவைப்பு இன்னதென்பது தோற்றாமற் போகாது. இதற்குத் தொல்காப்பியனார் கருத்துக்களையே பெரும்பான்மை தழுவியமைந்த இறையனார்களவியலுரையும், அதனை அடுத்து

---

ஆசிரியர் தம் நூலில் கூற்றுக்களைத் தனித்தனி கூறும் முறைப்படியே, "செம்பூட்சேயார் கூற்றியல்" என்ற இலக்கணமொன்றும் இருந்ததென்பது களவியலுரையாற் றெரிகின்றது.

காந்தர்வசம்பந்தப்பொருளும் பெரிதும் உபகாரப்படுவனவாகும். இவற்றிற் சிறுபான்மை தொல்காப்பியத்தோடு மாறுபடும் இடங்களும் உண்டேனும், அவை யுரியவிடங்களில்வைத்து விளக்கப்பெறும். இனி இக்களவொழுக்கின் பெரும்பிரிவுகளாக ஆசிரியர் கூறிய இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் தோழியிற்கூட்டங்களை முறையே கூறுவோம்.

## 1. இயற்கைப்புணர்ச்சி.

இயற்கைப்புணர்ச்சியாவது, முற்கூறப்பட்ட இலக்கணம் வாய்ந்த தலைமகனும் தலைமகளும் ஒருபொழிலிடத்தே எதிர்ப்பட்டுத் தெய்வ மிடைநிற்பப் பான்மைவழியோடித் தம்முள் ஒத்தகாதலுடையராய்க் கூடுங் கூட்டம். இக்கூட்டம் நிகழ்வதற்குமுன், ஒருதலைக்காமமாகிய கைக்கிளைப்பகுதிகள் இவர்க்குள்ளே நிகழும். அவை—காட்சி, ஐயம், தெளிதல், தேறல்—என்பன (நூ௨) இவற்றுள், காட்சியாவது, இவ்விருவரும் தெய்வவசத்தால் எதிர்ப்பட்டு ஒருவரையொருவர் முதன்முதலாகக் காண்பது. இக்காட்சிக்குப்பின், 'இங்ஙனந் தோன்றாநின்ற மாது திருமகள் முதலாகிய தெய்வமோ, அன்றி மக்கட்பிறப்பினளோ' என்று மயங்கிக் கூறுவது, ஐயமாம். இவ்வையமானது, அதனைத் தெளிதற்குரிய அறிவுவாய்ந்த தலைவன்கண்ணேயல்லது தலைவிகண்ணே நிகழாதென்றும், தலைவிக்கு ஐயநிகழின், அச்சமேயன்றிக் காமக்குறிப்புண்டாகாதென்றும் கூறுவர் (௯௪ உரை). இங்ஙனம் தெய்வமோ என்று ஐயுற்ற தலைமகன், விண்ணவர்க்கன்றி மண்ணவர்க்கேயுரிய குறிகள் சில தலைவியிடம் நிகழ்தல்கொண்டு ஐயம் நீக்குவான். இவ்வையம் நீக்குங் குறிகளாக ஆசிரியர் கூறியவை—"வண்டே இழையே வள்ளி பூவே, கண்ணே யலமரல் இமைப்பே அச்சமென்—றன்னவை பிறவு" மாகும். (௯௫) இவை, வானகத்தனவன்றி, வையகத்தனவாகக் கொள்ளுதல் கவிமரபாகும் [இவற்றுள் இழை—மகளிரால் இழைக்கப்பட்ட அணிகலம் வள்ளி—முலை, தோளினும் தோளினுடைய எழுதுந் தொய்யிற்கொடி கண்—வான்கணலலாத ஊன்கண்] இவையன்றிக் காலநிலந்தோய்தல், நிழலிடுதல், வியர்த்தல் முதலியனவும் அம் மக்கட்குறிகளாகும் இவற்றால் இவள் 'மக்களுள்ளாள்' என்று தெளிந்து அணிந்ததபின், தலைமகற்குப் புணர்ச்சிவேட்

¹ தொய்யிற்குழம்பால் கொடியெழுதலும் காமன்சிலையாகிய கரும்பெழுதலு மரபு (கலித்தொகை-111-16,17, 143-32,33)

னிகழ்வுண்டாக்க தலைவியைக் கூடக் கருதுதலும், அதன்பொருட்டு அவளோ டுடம்படுத்தற்குத் தலைவன் வாய்மொழியன்றிக் கண்களாற் குறிப்பித்து உசாவுதலும் நிகழ்வனவாம். நிகழ, அவளும் அஃதறிந்து (க௯௬) தன் னுறுவேட்கையை வெளிப்படக்கூறாது (க௧௮) கண்களின் குறிப்பாற் கூறுவள் என உணர்க. இவற்றை "நாட்டமிரண்டு மறிவுடம் படுத்தற் குக்-கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்" (௯௬), "தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்-எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லைப்-பிறநீர் மாக்க ளின்றிய வாயிடைப்-பெய்ந்நீர் போலு முணர்விற் றெனப" (க௧௮) என ஆசிரியர் கூறுதலா னுணர்க. "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்-என்ன பயனு மில" என்றார் வள்ளுவனாரும். இவ்வாறு, தலைவியின் உடம்பாடறிந்து, தலைவன் அவளைக் கூடக் கருதியதும், தலை விக்குப் "பொறிநுதல் வியர்த்தல்" முதலிய மெய்ப்பாடுகள் நிகழும். [இவற்றை மெய்ப்பாட்டியலில் விரித்துக் கூறினேம் ஆண்டுக் காண்க] இங்ஙனம், இருவர் குறிப்பும் ஒத்து நிற்றலே உள்ளப்புணர்ச்சி என்றும், வழிநிலைக்காட்சி என்றும் கூறுவர். வேறு வாயில்களின்றித் தாமே தூதுவராக நிகழ்த்ததும் (க௧௬) இவ்வுள்ளப்புணர்ச்சியே, மெய்யுறு புணர்ச்சிக்கு நிமித்தமாகும் (௬௭). இவற்றை, "உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியுங்-கள்ளப் புணர்ச்சியுங் காதற் குரிய" "பொரு விறந் தோற்கும் பெருமையு முரனும்-நனுதற் கச்சமும் நாணமும் மடனும்-மன்னிய குணங்க ளாதலின் முன்னர்-உள்ளப் புணர்ச்சி யுரிய தாகும்" (௬௪-௬௫) என நம்பியாரும் கூறுதல் காண்க.

இங்ஙனம், மெய்யுறற்குக் கூடிய தலைவன், தன்னன்பு தலைவிக்குப் புலப்பட அவளைப் புகழ்ந்து கூறி, 'இனித் தலைமகளுடன் இவ்வாறு நீட்டித்திருப்பின் ஏதமாம்' என்று கருதி, அவளிடத்தினின்று பிரியக் கருதுவான் கருதுமவன், வண்டு நெஞ்சு முதலியவற்றை முன்னிலை யாக்கி, அவற்றுக்குத் தன் கழிபெருங்காதல் கூறுவானாக, அக்குறிப்பு ற்றிந்து தலைவி கவன்றவிடத்து "நின்னொடுபட்ட தொடர்ச்சி எழுமை யும் வருகின்ற தொன்றாதலால், இத்தகைய நின்னைப் பிரியேன், பிரியின் ஆற்றேன், அன்றி அறனல்லது செய்தேனுமல்லேன்" என்று நயப்புக் கூறித் தலைமகளைத் தேற்றுவன். இங்ஙனம் இவன் கூறுதலின் பயன்-, புணர்ச்சி யெய்திய தலைவிக்கு "இவன் எவ்விடத்தான் கொல்லோ, இன் னும் இதற்கு கூடுங்கொல்லோ, என்பால் இவன் அன்புடையன கொல்லோ"

என்று நிகழ்தற்குரிய ஐயமுணர்த்துதலேயாம். இதனால், தலைவி ஐயம் நீங்குமேனும், தலைமகனது பிரிதற் குறிப்பறிந்து அதற்குப் பெரிதும் ஆற்றாது புசந்து காட்டுவள். காட்டு, மற்றும் 'அவளை வற்புறுத்த வெண்ணி 'எனதுடையப்பதி, நினதூராகக்கு மிகவும் அணணியது' என்று சொல்லித் தான் அடுத்தடுத்து இங்குவருதல் எளிது என்பதைக் குறிப்பித்துத் தலைவியை ஆற்றிப் பிரிவன் இங்ஙனம் பிரிதலும் வற்புறுத்தலும் முறையே பிரிவச்சம், வன்புறை என்று கூறப்படும். (பக். உருந)

இங்ஙனங் கூறித் தலைமகளை ஆற்றிப்பிரியுந் தலைமகன், அவளைத் தனியளாக நிறுத்தி நீங்குமோ எனின், நீங்கான்; தலைவியை நோக்கி, 'இனி, நீ முற்பட்டு உன்தோழியரோடு சேர்ந்துகொள், யான் இவ்வழியாகச் சென்று நீங்குவருவேன்' என்று, அவளை விளையாடுந் தோழியரிட்டத்து உய்த்து அகன்றுபோய்த் தன்னைப் பவளர் காணாமல் தான் அவளைக் காணப்பதோர் அணிமைக்கண் ஒருபொழிலில் மறைந்து நின்று, தலைவி பின் ஆயக்கூட்டத்தையும் அவ்விடந் தன்னையும் நோக்கி 'இவளையான் எய்தினேன் என்பது மாயமோ? இனி இவள் நமக்கு எய்தற்கரியள்' என்று அவளது அருமையறிந்து வருந்தி, ஆண்டு நின்று நீங்குவான். இவ்விடத்தே, தலைவியோடு இணைபிரியாது செல்லுகின்ற, அவள் காதற்றோழியைத் தலைவன் குறிப்பாலறிந்துகொள்ளுதலையும் பின்னூலார்கள் கூறும் ஆயினும் "பெட்டவாயில்பெற்று இரவுவலி யுறுத்தலும்" (பக். உசரு) என்று, தோழியிற்கூட்டம் நிகழுமிடத்தே வைத்துத் தொல்காப்பியத்துக் கூறப்பட்டுள்ளது. இவ்வாறே வேறுசில துறைகள் களவிக்கோவையுள்ளிற் கூறப்பட்டனவு முள. இன்னோரன்னவெல்லாம் இயற்கைப் புணர்ச்சியாமென்றுகொள்க. பேராசிரியர் "காட்சியும் ஐயமும் துணிவும் புணர்ச்சியும் பிரிவச்சமும் வன்புறையுமென்று இன்னோரன்னவெல்லாம் இயற்கைப் புணர்ச்சி என்னும் கிளவிக்கண் அடங்குமென்பது" என்றெழுதியவாறு கண்டுகொள்க (பக். எருஎ) "இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தினொடு-முயற்சியின்றி முடிவதாகும்" என்றார் நம்பியார். இப்புணர்ச்சியைத் தெய்வப்புணர்ச்சி, முன்னுறுபுணர்ச்சி காமப்புணர்ச்சி என்றுங் கூறுவர் (திருக்கோவை-கஅ)

## 2. இடந்தலைப்பாடு.

இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்து இருவரும் பிரிந்தபின்னர், அப்பிரிவாற்றாது வருந்துகின்ற தலைமகன் தலைவியை மறுநாளுங் கூடவெண்ணி

"யான் அவளை எய்தியது விதியானே" இன்னும் அவளைத் தருமேற் காண்பன்" எனத் துணிந்து அதனைத் தன் தோழனுக்குக் கூறாது, முந்திய நாளில் அவளைக் கண்ணுற்ற பொழிலே புக்கான் தலைவியும், பிற்றை ஞான்று தன் ஆயவெள்ளத்தோடும் வந்து விளையாடிவருகின்றவள், நேற்றைத் 'தின்னிற்பிரியேன்' பிரியின் ஆற்றேன் என்று நீங்கிய தலைவனை, அறியாது 'இவ்வாயத்துள்ளே வருவானன்றோ' என்னும் பெருநாணினாலும், 'ஆற்றாமையால் இறந்துபட்டானன்றோ' என்ற அச்சத்தினாலும் மீதூரப்பட்டு, நெருநற்று தலைமகனை வழிப்பட்ட இடமெதிர்ப்பட்டுத் தலைமகனைக் கண்டாற்போலப் பரவசமாகின்றாள். ஆயங்களும் முன்னையிற் பிரிந்தாற்போன்று, தமை விழையத்தக்கன தொடுத்துமென்றும், கண்ணி நன்னாற்றத்தன செய்துமென்றும், போது மேந்தக்கன கொய்துமென்றும் இவ்வாறு விளையாட்டுவிருப்பாற் றனித்தனி பிரிந்த நிலையில், தலைமகனும் அவ்விடநோக்கிச் சென்று தனியளாய் நின்ற தலைமகளை எதிர்ப்பட்டத் தலைவியு மவனைக் கண்டு 'இவனம்பால 'அன்பிலனோ' என்று முன்பு நிகழ்ந்த ஐயம் நீங்கிப் பெரிதுவகை கூர்ந்தாள். ஆயினும், தன்னியற்கைக் குணங்களாகிய நாணமுதலியன அகக்குறிப்பை வெளிப்படுத்தாவண்ணம் தடுத்துநின்றன. சிறப்ப இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகும்; அதனால் வேறுபட்டாளோ, அன்றிக் 'களவு வெளிப்படுதலால் இனி மணஞ்செய்துகொள்ளினல்லது இக்கூட்டத்துக்கு 'உடம்படாள்கொல்லோ' என்று கருதி, அது வெளிப்படாமாறு அவளது மெய்யுறுதற்கண்டிக் குறிப்பறியலாயினன் இது 'மெய்தொட்டுப் பயிறல்' எனப்படும் நச்சினார்க்கினியர், புலையன் றீண்டாற்போல மனங்கொள்ளுதலுங் கொள்ளாமையுமாகித் தலைவி நிற்கின்றகாலத்தே தொட்டான் என்பர் மெய் என்பது ஈண்டுத் தோளாம் "உறுதோ றுயிர் தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்-கமிழ்தி னியன்றன தோள்" என்றார் வள்ளுவரும் இக்கிளவியை வண்டோச்சிமருங்கணைதலென்பர் பின்னுள்ளோர் அஃதாவது தலைமகளைச் சாரவெண்ணிய தலைவன் அவள், 'குழலை நோக்கி வந்த வண்டையோட்டுவதுபோல நெருங்கி, ஓட்டுமிடத்துக் கை பட்டதுபோலத் தொடுதலாம். இங்ஙனம் மெய்

---

சகுந்தலை துஷ்யந்தர்களது காந்தருவக்கூட்டத்தே, வண்டோச்சி மருங்கணைதல் கூறிக் காளிதாசமகாகவி சிறப்பித்தலும் (சாகுந்தளம்-அங்-3) காதம்பரியில் புண்டரீகமுனி மஹாசவேதையைக் கண்டு காதலித்தபோது, பூவளித்தல் வாயிலாக அவள்மெய் தொட்டதாகப் பாணகவி கூறுதலும் ஈண்டு ஒப்பிடத்தக்கன.

தொட்டுப் பயின்றவன், தலைவியின் உடம்பாட்டுக்குறிப்பறிந்து, அவ்வுழ இய சோலையிடத்தே அவளைக் கூடவெண்ணிப் பலவாறு புகழ்ந்து கொண்டு அவளை நெருங்கினான். நெருங்கத் தன்னியற்கைக் குணங்கள் தடுத்தலால், நாணிக் கண்புதைத்துக்கொண்டும், ஆங்குள்ள கொடிகொம்பர்களில் மறைந்து நின்றும் அக்கூட்டத்திற்கு இடையூறு சில தலைவி நிகழ்த்த, அவற்றுக்காற்றாது தலைவன் பலபடக் கூறியபின் அவளொடு கூட்டம் நிகழ்கின்றது: அது நிகழ்ந்தபின் பெரிதும் மகிழ்ந்தவனாய்த் தலைவியைப் பிரிதற்கெண்ணி, அவளைத் தேற்றுதற்கு 'என்றும் இனிப் பிரியேன்' எனத் தெய்வத்தொடு சார்த்திச் சூளுறுதலும் 'இனி இவளைக் கூடுவது அரிதாமோ' என்றிரங்கித் தலைவன் அச்சோலையை விட்டு நீங்குவானாயினன். இத்துணையும் இடந்தலைப்பாடாமென உணர்க.

ஆசிரியர் 'மெய்தொட்டுப்பயிறல்' என்ற சூத்திரத்தே (க0உ) இவ்விடந்தலைப்பாட்டுக்குரிய தலைவன் கூற்றாக, எட்டுக் கிளவிகள் கூறுவர். அவற்றாலும் அவற்றினுரையாலும் மேற்கூறிய செய்திகளெல்லாம் விளக்கமாகும். நாற்கவிராசநம்பி முதலியோர், மெய்தொட்டுப்பயிறல் முதலியவற்றை, முந்திய இயற்கைப்புணர்ச்சியின் வகைகளாகக்கொண்டு வழங்குவர். இவ்விடந்தலைப்பாடு, தலைவன் தானேசென்று கூடியது. இனிப் பாங்கனாற் றலைவன் முற்குறித்த இடந்தலைப்பாட்டுப் புணர்ச்சி எய்தவும் பெறுவன்; எனவே, தானேகூடுவது, பாங்கனாற் கூடுவதென இடந்தலைப்பாடு இருவகைப்படுமென்பர் (பக-உஙகூ) பேராசிரியரும் "'துணையின்றி நிகழுங்களவு சிறப்புடைத்தாதலால், 'பாங்கன் கழறும், (இடித்துக்கூறுவன்) என்றஞ்சி அவனை முந்துறத் தலைவன் மறைத்தொழுகுமாதலின்" தனானற் கூடும் இடந்தலைப்பாடு நிகழ்ந்தபின்பே, பாங்கனைத் தலைவன் துணையாக வேண்டுவன் என்று கூறினர் (பக்-எசகூ). ஆனால் களவியலுரைகாரர் "பாங்கற்கூட்டம் நிகழின் இடந்தலைப்பாடு நிகழாது; இடந்தலைப்பாடு நிகழிற் பாங்கற்கூட்டம் நிகழாது; என்னை? அத்துணை (தலைவி) எளியள் அல்லள் ஆகலான்" (பக்-ருரு.) எனக் கொண்டார். இக்கொள்கைப்படியே திருச்சிற்றம்பலக் கோவையுரை (49) முதலியன கூறுவன என உணர்க.

### 3. பாங்கற்கூட்டம்.

இவ்வாறு இடந்தலைப்பாட்டுத் தானே தலைமகளைக்கூடி, ஆற்றுவித்து நீங்கிய தலைமகன்—'நின்னிற்பிரியேன்' என்று சூளுறுதலைப்பெற்றும் பிரிந்

